# இயலிசை

தனிப் பிரதி விலை 50 காசுகள்
ஆண்டு சந்தா ரூ. 10
அரையாண்டு சந்தா ரூ. 5

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்

துணை ஆசிரியர் :
K. P. இளங்கோவன்

"இயலிசை,"
9A, ஆண்டவர் தெரு,
அண்ணா நெடும் பாதை, சென்னை-94

மலர் 4 1-6-85 இசைக்கலை தமிழ் மாதமிருமுறை இதழ்—1


## வாழ்த்துகின்றோம் !



★ கடந்த ஆண்டு அக்டோபர் மாதத்தில் உடல் நிலை மிகவும் பாதிக்கப்பட்டு, தீவிர சிகிச்சைக்குப்பின் அனைவரும் அதிசயக்கத் தக்க வகையில் உடல் நலமும், பொதுத் தேர்தலில் வெற்றியும் பெற்று மீண்டும் தமிழக முதல்வராகி உள்ள டாக்டர் M.G.R அவர்களுக்கு 'இயலிசை' வாழ்த்து!

★ 1984 வருட டெல்லி சங்கீத நாடக அகடமி விருதுகள் பெற்ற திருமுருக கிருபானந்த வாரியார், பாடகர் மகாராஜபுரம் சந்தானம், புல்லாங்குழல் N. ரமணி, நடனமணிகள் சாரதா, சுதாராணி ரகுபதி இவர்களுக்கு இயலிசை வாழ்த்துக்கள்! சமீபத்தில் சென்னை மியூசிக் அகடமியில் இந்தியக் குடியரசு துணைத்தலைவர் திரு R. V. வெங்கட்ராமன் இவர்களுக்கு விருதும், ரூ. 10,000/- பணமும் வழங்கினார்.

★ சிதம்பரம் அண்ணாமலைப்பல்கலைக் கழகத்தின் இசைத் துணைத் தலைவராக 3 ஆண்டுகளுக்கு நியமிக்கப்பட்டு உள்ள இசைக் கலைஞர் டாக்டர் சீர்காழி கோவிந்தராசன் அவர்களுக்கு இயலிசை வாழ்த்து! இதுவரை டாக்டர் மதுரை சோமு அவர்கள் இங்கு தலைவராகப் பணியாற்றி ஓய்வு பெற்றுள்ளார்.

திருமயிலையில்

## திருஞான சம்பந்தர் இசை விழா

கடந்த 13 ஆண்டுகளாக திருக்கழுகுன்றத்தில் இந்து சமய அறநிலையத்துறை ஆதரவுடன் நடைபெற்று வந்த திருஞான சம்பந்தர் இசைவிழா இவ்வாண்டு ஜுன் 14 முதல் 16 தேதி வரை சென்னை மயிலை அருள்மிகு, கபாலீசுவரர் திருக்கோயிலில் நடைபெற உள்ளது இதில் அமைச்சர் பெருமக்கள், சமயச் சான்றோர்கள், ஏராள தமிழிசை வாணர்கள் சிறப்பிக்க உள்ளனர் விழா ஏற்பாடுகளை இசையரசி டாக்டர் சேலம் S ஜெயலட்சுமி செய்து வருகின்றார்

## வசந்தம் வருகிறது

### இசைப்பாடல் தொகுதி வெளியீட்டுவிழா

மாவட்ட மைய நூலகத்தில் நடந்த விழாவில் வசந்தம் வருகிறது நூலை திரைப்பட இயக்குனர் எஸ் பி முத்துராமன் வெளியிடபாடகர் இசையரசு டி. கே. எஸ். கலைவாணன் பெற்றுக் கொண்டார். விழாவுக்கு சிலம் பொலி செல்லப்பன் தலைமை தாங்கினார். இவ்விழாவில் பணம் பணம் பணம் என்ற நூலும் வெளியிடப்பட்டது. நகைச்சுவை நடிகர் கே. ஏ. தங்கவேலு நூலை வெளியிட உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியம் பெற்றுக் கொண்டார்.

நூலாசிரியர் ஏர்வாடி. எஸ். இராதாகிருஷ்ணனைப் பாராட்டி அமுதசுரபி விக்கிரமன் அனுராதாரமணன் மு. மேத்தா, சுரதா, ஔவை நடராசன், வானொலி நிகழ்ச்சிக் தயாரிப்பாளர் முருகன் அரசு மணிமேகலை ஆகியோர் பேசினர். கவிக் கொண்டல் செங்குட்டுவன் வரவேற்புரை நிகழ்த்தினர். மூவேந்தர் முத்து நன்றி கூறினார். முன்னதாக இசையமைப்பாளர் கே. எஸ், சிவராமகிருஷ்ணனின் இசை நிகழ்ச்சி நடந்தது. கவிஞர் ஏர்வாடி.எஸ். இராதாகிருஷ்ணன் பாடல்களை டி. கே. எஸ். கலைவாணன், செல்வி சியாமளா ஆகியோர் பாடினர்.

நடன பள்ளி

## பிரசன்னாலயா ஆண்டு விழா

சென்னை அடையாறில் கடந்த 4 ஆண்டுகளாக நடந்துவரும் நடனப் பள்ளி பிரன்னாலயா இதன் 4வது ஆண்டு விழா தமிழக தொழில்துறை அமைச்சர் மாண்புமிகு K இராஜாராம் அவர்கள் தலைமையில் 16-2-85 அன்று மயிலை R R சபையில் நடைபெற்றது பள்ளி மாணவிகள் பலர் நடனமாடினர்



இப்பள்ளி மறைந்த நடனமணி குமாரி பிரசன்ன வதனி என்பவரின் பெயரால் துவக்கப் பெற்றது. இவர் இலங்கையின் பிரபல எழுத்தாளர் சிவபாத சுந்தரம் மகளாவர் இந்திய பாரத நாட்டிய தபால் தலைகளில் இவரையே தேர்ந்தெடுத்து வெளியிட்டனர் அடையார் கலாசேத்திர திருமதி ருக்மணி தேவி அருண்டேலின் குறிப்பான மாணவிகளில் ஒருவர் கலாசேத்திராவிலேயே சில ஆண்டுகள் நடன ஆசிரியராக பணியாற்றினார் 5 ஆண்டுகளுக்கு முன் ஒரு தீ விபத்தில் காலமானார் வாழ்க அவர் நாமம்! வளர்க அவர் பணி!

கலைமாமணி

## முத்துகந்தசாமி தேசிகருக்கு பாராட்டு!

## ஏ.கே.சி.பொன்னாடை போர்த்தினார்

இவ்வருடம் கலைமாமணி விருதுபெற்ற திருப்பனந்தாள் S. முத்து கந்தசாமி தேசிகருக்கு திருச்சி மலைக்கோட்டை இசைக்கலைஞர்கள் சமாஜ இசைவிழாவில் கிளாரினட் மேதை ஏ.கே.சி. நடராசன் பொன்னாடைப் போர்த்தி கௌரவித்தார். மலைக்கோட்டை நாதசுரம் கலைஞர் பேரையூர் சுப்ரமணியமும் தேசிகருக்கு பொன்னாடை போர்த்தி பாராட்டினார்.

திருச்சி மலைக் கோட்டையில் வசித்து வரும் தேசிகர் திருபனந்தான் மடத்தின் சார்பில் மலைக்கோட்டை ஸ்ரீ தாயுமானவர் சந்நதியில் உள்ள ஸ்ரீ காசி மடத்தின் சிவசிவ ஒலி மண்டபத்தில் இசைப் பணி புரிந்து வருகின்றார். இலங்கைத் திருக்கேதீச்சரம் தேவஸ்தான மகா சிவராத்திரி விழா இதர இலங்கை ஆலய உற்சவங்களில் சுமார் 27 முறைகள் கலந்து திருமுறைப்பணி புரிந்தவர்- தமிழகமெங்கும் திருமுறை இசை நிகழ்ச்சிகள் நடத்தி வருகின்றார்.

இவர் திருச்சி மலைக்கோட்டையில் நடைபெற்று வரும் திருநெறி தமிழிசை மன்றத்தின் செயலாளராகவும் பணி புரிந்து வருகின்றார்-

[தகவல்' யாழ்ப்பாணம் இரா திருஞான சம்பந்தஓதுவார்]

## வாழ்க மணமக்கள் !

★ பிரபல திரைப் பாடற் கலைஞர் திருமதி S. ஜானகி — ராம் பிராசாத் இவர்கள் மகன் செல்வன் முரளிகிருஷ்ணாவிற்கும்— K. B. சுப்ரமணியம் மகள் செல்வி உமாவிற்கும் 4-2-85 அன்று சென்னையில் திருமணம் நடைபெற்றது.

★ மயிலை அருள் மிகு நவசக்தி விநாயகர் ஆலய அறங்காவலர் குழு செயலாளர்—கனகா பப்ளிசிடிஸ் உரிமையாளர் K. V. கனகசபை செயலாளர் மகள் செல்வி க. மீனாட்சிக்கும்— சதானந்த கிராமணியார் மகன் செல்வன் ச. சேகருககும் 4-3-85 அன்று சென்னையில் அமைச்சர்கள் முன்னிலையில் திருமணம் நடந்தது.

★ இசைக் கலைஞர் B. N. நாகராசன் அவர்களுக்கும் புவனகிரி T. N. சாமி அவர்களின் மகள் செல்வி S. வரலட்சுமிக்கும் 27—3—85 அன்று மயிலையில் திருமணம் நடைபெற்றது.

★ பிரபல இசைக் கலைஞர் கீரனூர் கீ சி. குருராமலிங்கம் மகள் இசைச்செல்வி வான்மதிக்கும மயிலாடுதுறை மண்வளப் பாது காப்பு அலுவலர் ராசாவிற்கும் கடலூர்திருவகீந்திர புரத்தில் 27—3—85 அன்று திருமணம் நடைபெற்றது.

★ இயலிசை ஆதரவாளர் செல்வன் V. ரெகுராஜன் B. com.B L (Sri Nachammai cotton mllis. Chettinad) அவர்களுக் கும்—மேட்டுப் பாளையம் R. கண்ணபிரான் அவர்கள் மகள் செல்வி மகேஸ்வரிக்கும் கோவையில் 27—3—85 அன்று திரு மணம் நடைபெற்றது

★ பம்பாய் ஸ்ரீராஜராஜேசுவரி பரதநாட்டிய கலாமந்திர் இயக் குநர் திரு T. K. மாகலிங்கம் பிள்ளையின் சகோதரர் மகள் செல்வி சசிகலா B. com. சென்னை T. S. நாகராசன் மகள் செல்வன் மோகன் B. E (Madras Fertilisers LTD) இவர்கள் திருமணம் 2-5-85 அன்று பம்பாயில் நடைபெற்றது

★ குங்குமம் இதழ் மேலாளர் திரு. A. சண்முகவடிவேல் மகள் செல்வி S. சாந்திக்கும், திருவல்லிக்கேணி T. E. சிவனேசன் அவர்கள் மகன் S. பாலசுப்பிரமணியன், B. Sc. க்கும் டாக்டர் கலைஞர் தலைமையில் 5—4—85 அன்று சென்னையில் திருமணம் நடைபெற்று.

★ நடனஆசிரியர் கலைமாமணி சுவாமிமலை S. K. இராசரத்தினம் பிள்ளை மகள் செல்வி ஜெயகமலா State Bank of Hyderabad) செல்வன் பாண்டியன் B. Tech, M. E. இவர்கள் திருமணம் 15-5-85 அன்று சென்னையில் நடைபெற்றது

★ பிரபல மிருதங்கக் கல்லூரி திருவாரூர் பகதவச்சலத்திற்கும் நடனஆசிரியர் வழுவூர் R. சாம்ராஜ் அவர்களின் மகன் செல்வி சாமுண்டிஸ்வரிக்கும் 22-5-85 அன்று திருமணம் நடைபெற்றது

★ இம்மணமக்களுக்கு இயலிசையின் வாழ்த்துகள் !

## கடிதங்கள்

நீங்கள் அன்புடன் அனுப்பிவரும் 'இயலிசை' என்ற இனிய இதழை ஆர்வத்துடன் படித்து வருகிறேன் இசை சம்பந்தமான முக்கிய செய்திகளையும் தமிழகத்தில் ஏன் பம்பாய் போன்ற வெளி மாநிலங்களிலும் நடக்கும் இசை கலைநிகழ்ச்சிகளையும் சங்கீத சபை கள் பற்றியும், இசைவாணர்களின் அருமை பெருமைகளையும் முறை யாகத் தெரிவித்து வருகிறீர்கள் 'ஆடலரசி அபிராமி' என்ற புதுமை தொடர்கதையும் வெளியிட்டு வருகின்றீர்கள்

இன்னிசை மேதையாய் விளங்கிய உங்கள் தந்தையாரின் கானு மிர்தத்தை கேட்டு மகிழும் பேறு பெற்றவன் யான் நல்ல இசை வாணரான நீங்களும் இசைக்கலை வளர்ச்சியில் ஆர்வங்கொண்டு தொண்டாற்றி வருவதை நான் உளமார பாராட்டுகிறேன்.

பேராசிரியர் நாராணதுரைக்கண்ணன்
சென்னை-94

15-12-84 தேதி இசைவிழா சிறப்பிதழ் சென்னையில் நடைபெறும் இசை விழா நிகழ்ச்சிகளின் விபரம் சிறப்பாக எந்த பத்திரிக்கை வெளியிடாதவாறு இயலிசையில்தான் பார்க்க முடிந்தது நன்றி

கடம் D C அருணகிரி
குடியாத்தம்

தங்களின் 'இயலிசை' இதழ் மேன் மேலும் வளர எங்களின் இனிய இதய நல்வாழ்த்துக்கள்

நெல்லை சங்கீத சபா, திருநெல்வேலி

## வருந்துகின்றோம்

ஃ பழம்பெரும் நாதசுர இசைக் கலைஞர் தஞ்சை வல்லம் V. A. கிருஷ்ணன் அவர்கள் சமீபத்தில் மறைந்தார்

ஃ குடியாத்தம் இசைக் கலைஞர்கள் சங்க செயலாளரும் பிரபல தவில் கலைஞரும் இயலிசை ஆதரவாளருமான திரு. T. V.இராஜேந்திரன் 18-2-85 அன்று இயற்கை எய்தினர்

ஃ காஞ்சிபுரம் நமிழ்நாடு திருமுறை மன்ற செயலாளர் இசை வாணர் திரு கு. புண்ணிய கோடி அவர்கள் 10-10-85 அன்றுச் சிவனடிச் சேர்ந்தார்.

## தமிழ்ப் பழமொழி ஆக்கம் மொழியாக்கம் ஆய்வுத் திட்டம்

பேரன்புடையீர்,

வணக்கம். தமிழ் உலகந்தில் வழங்கும் பழமொழிகள் எல்லா வற்றையும் தொகுத்து, அறிவியல் அடிப்படையில் வகைப்படுத்தி, ஆங்கிலத்தில் பொழியாக்கம் செய்து, மிகவிரிவான முறையில் ஆராயத்திட்டமிட்டுள்ளேன். இத்திட்டத்திற்கு மைசூரில் உள்ள இந்திய மொழிகள் நடுவண் நிறுவனமும், நடுவண் அரசின் கல்வி பண்பாட்டு அமைச்சகமும் துணைபுரிகின்றன. நீங்கள் உங்கள் வட்டத் திலும், மாவட்டத்திலும் வழங்கும் தமிழ்ப்பழமொழிகளையும் நீங்கள் பல்வேறு இடங்களில் பலர் வாயிலாகக் கேட்ட பழமொழிகளையும் தொகுத்து அனுப்ப வேண்டுகின்றேன். நீங்கள் அனுப்பம் பழமொழி களுக்கும் பொதுப் பொருளைத்தவிர'உங்கள் மாவட்டத்திற்கே உரிய நுண் பொருளோ, சிறப்புப் பொருளோ இருக்குமாயின் அவற்றை யும் குறுப்பிடுங்கள்.

பழமொழி அனுப்ப வேண்டிய முகவரி:

Dr. V Perumal, M. A. B. T. B. Litt, M, R. A. S.
Senior Fellow (CIIL Mgsore)
Pampakam, Swarna Nagar
Robertsonpet K. G. F. 563 122

# ஆலாசிஅமராம்

## 19. நாத சிறை

பெருங்கலைஞர்களும் சிலசமயம் மூடு வராமல் சாதாரணமாக நிகழ்ச்சியை நடத்தி கொண்டிருப்பார்கள். அதற்கு பல காரணங்கள் உண்டு. அன்று அவர்களுக்கு மனநிலை அல்லது உடல்நிலைசரியில்லாமல் இருக்கலாம். துணைக்கருவியாளர்கள் அமையாமல் இருக்கலாம். எதிரில் உற்சாக மூட்டக்கூடிய ரசிகர்கள் இல்லாமல் இருக்கலாம். அவர்களில் சிலர் கச்சேரியை கவனிக்காமல் பேசிக் கொண்டேயிருக்கலாம் இந்நிலையில் ரசிகர்கள் திரளாக இருந்தாலும் அவர்கள் உப்பு கூடாத விருந்தினை சாப்பிடுவது போல் ரசித்துக் கொண்டு இருப்பார்கள். என்ன குறை இருந்தாலும் எதிரில் நாலுபோ உட்கார்ந்து 'பலே பலே என்று தலை ஆட்டி விட்டால் போதும் யாருக்கும் மூடு வந்துவிடும் இரண்டு கைதட்டல் கிடைத்து விட்டால் போதும் இன்னும் கச்சேரி அன்று அமர்க்களம் தான்.

தஞ்சாவூர் திருமண வீட்டு மாப்பிள்ளை அழைப்பிற்கு சிக்கல் சண்முகசுத்தரம் பிள்ளை நாதசுரம் வாசித்தது மக்களுக்கு சுவையான விருந்தினை உண்டது போல் இருந்தது. அவர் சுந்தரம் பிள்ளையைத் தொடர்ந்து வாசித்த ப்யாகடை ராகமே களைகட்டிவிட்டது அது முடிவதற்குள் கல்யாண வீடு வந்து விட்டது. மாப்பிள்ளையை உள்ளே அழைத்து செல்ல கல்யாணக்காரர்கள் தயாராக இருந்தனர் ஆனால் பொதுமக்கள் மாப்பிள்ளையை அதற்குள் அழைதது செல்லாதீர்கள் என்று கல்யாணக் காரர்களை கேட்டுக் கொண்டனர் மாப்பிள்ளையை மண்டபத்துள் அழைந்து விட்டால் நாதசுர நிகழ்ச்சியை முடித்து விடுவார்கள் என்று அவர்களுக்கு அச்சம். கல்யாண காரர்களும் இதை உணர்ந்து திருமண விட்டு வாயிலில் உள்ள பெரிய திண்ணையில் மட மட வென்று ஜமுக்காளம் விரித்து நாயனக்காரர் குழுவினை அதில் அமர்த்தினர் சுந்தரம பிள்ளை திண்ணையிலேயே அவர் அருகில் அமர, மக்கள் எதிர் திண்ணைகளிலும் சாலையிலும் அமர்ந்து நாத வெள்ளத்தில் மூழ்கினர். திருமண விழாவிற்கேற்ற கல்யாணி: மோகனம், ஸ்ரீரஞ்சனி. கௌளை போன்ற மங்கள இராகங்களை வாசித்து கொண்டிந்தார் சிக்கலார்.

இடையில் மாப்பிள்ளையை நீண்டநேரம் வாயிலில் வண்டியில் இருக்கவிடாது ஆலம் சுற்றி உள்ளே அழைத்து செல்லலாம் என்று இரண்டு சுமங்கலிப் பெண்கள் ஆரத்திதட்டுடன் வந்தனர். கூட்டத்தினர் அவர்களைக் கண்டு கூச்சல் போடவே பயந்து அவர்கள் திரும்பி சென்று விட்டனர். மாப்பிள்ளையோ பொறுமையுடன் நாத சிறையில் தனது வண்டியில் அமர்ந்து கொண்டிருந்தார். இருந்தாலும் தனது அழைப்பிற்கு சிக்கலார் வாசிக்க தஞ்சாவூரே திரண்டு இருந்தது அவருக்கு பெருமையாக இருந்தது.

அந்த திருமணத்திற்கு சுப்புணி சமையல் வேலைக்கு வந்திருந்தான். பஞ்சாட்சர பாகவதர் விருந்தினராக வந்திருந்தார். சிக்கலார் மேளம் கேட்டு அவரும் வந்து கலந்து கொண்டார்.என்றலும் அவர் பார்வைபடும்படி இருக்கவில்லை. காரணம் அவருக்கும் இவருக்கும் கொஞ்சம் மனவேறுபாடு 'வாங்கல்' உண்டு. சிக்கலார் தனது குறும்புப் பேச்சால் பிறரது விரோதமும் பெற்றுக் கொண்டவர் அந்த வரிசையில உள்ளவாதான் பஞ்சாட்சர பாகவதர். எனினும் அவரைக் குறித்து எதிரிலோ, பின்னல் நான்கு பேர் நடுவிலோ குறைவாகப் பேச அனைவருமே அஞ்சுவர்.

கச்சேரி முடிந்ததும் கல்யாண வீட்டார் பிள்ளையவர்களை மிகவும் பாராட்டி விருந்துண்ண வைத்தார்கள். விருந்து மண்டபத்தில் பாகவதரைக் கண்டு விட்டார். சிக்கலார் சுப்புணியும் அங்கு இருந்தான். உடனே சிக்கலார்'' என்ன பாகவதரே கல்யாண வீட்டிலும் கதாகாலட்சேபமா? ''என்று கேட்டார் அவர் கேட்டது யதார்த்தமாக இருந்தாலும் பாகவதருக்கு கிண்டலாகப்பட்டது. காரணம் பாகவதர் தானே சென்று பல இடங்களில் கச்சேரி கேட்பவர். அக்காலத்தில் கலைஞர்கள் யாரும் வலிய சென்று வாய்ப்பு கேட்க மாட்டார்கள் அதனைக் குறைவாக எண்ணினர். கச்சேரி கேட்டு யாரேனும் வந்தாலும் உடனே ஒப்புக் கொள்ளமாட்டார்கள், அதனை ஒரு பந்தாவாக வைத்திருந்தனர். தானே சென்று வாய்ப்பு கேட்பதனைத்தான் நாயனக்காரர் கிண்டல் செய்கின்றர் என்று நினைத்த பாகவதர் .அவருக்கு ஒன்றும் பதில் சொல்லாமல் அசட்டுசிரிப்பு சிரித்துக் கொண்டார். என்றலும் பெருங்கூட்டத்திலும் நாயனக்காரர் தன்னை மதித்து இரண்டு வார்த்தைகள் பேசியது அவருக்கு பெருமைதான்.

நாயனக்காரரை கல்யாணக்காரர்கள் அழைத்து மறுநாள் முகூர்த்தம் பற்றி பேசினர் சிக்கலாரோ, 'மன்னிக்கவும் இன்று எப்படியும் வந்து விடவேண்டும் என்று வந்து விட்டேன். நாளைக்கு வேறு மேளத்தை அறுப்புகின்றேன். உங்கள் ஆஸ்தான திருவாரூர் மேளம் போலவே அது இருக்கும். நான் ஆதினத்தில் வாசிக்க வேண்டும் 'என்று சென்றர். தான் வாங்கிய தொகை நீங்கலாக மிகுதியை அவருக்கே அளிக்கவும் என்றும் சொன்னர். இது கேட்டு கல்யாண காரர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. என்றலும் அவரிடம் மேற் கொண்டு கேட்க தைரியமில்லை. அவரை வெறுங்கையாக் அனுப்பவும் மனமில்லை. ஏதோ சிறு தொகையை சன்மானமாக வெற்றிலை பாகரு தட்டில் வைத்துக் கொண்டு வந்தனர். சிக்கலார் அதனை எடுத்து தனது பக்கத்தில் நின்ற சுந்தரம் பிள்ளை கையில் கொடுத்து 'பிள்ளைவாள் ஆசிர்வாதம் எனக்கு வேண்டும்' என்றர் சுந்தரம் பிள்ளைக்கு புல்லரித்து விட்டது.

ஆனல் மண்டப மாடி அறை ஒன்றில் அமர்ந்து பேசிக் கொண்டிருத்த பஞ்சாட்சரபாகவர் சுப்புணி பேச்சோ வேறு மாதிரி இருந்தது.

சுப்புணி பாகவதரிடம், 'என்னங்க சிக்கலாருக்கு அப்படி ஒரு பேரு.......... கூட்டம் என்று கேட்டு அவர் வாயைக் கிளறினன்.

பாகவதர் ஒன்றுமில்லை சுப்புணி, பாட்டுபாதி பந்தாபாதி என்பார்கள். அதுதான் சிக்கலார் தொழில் ரகசியம். இனிமையான குழல்நாதம் இதைதவிர வேறு சரக்கு அவரிடம் கிடையாது. செம்பொன்னர் கோவில் மேளம், கீரனூர் மேளம் சிதம்பரம் மேளம்போல தொழில் உண்டா. இவருவாசித்து வந்த புகழைவிட வாசிக்காம வந்த புகழ்தான் அதிகம். இந்த சாதாரண வீட்டு திருமணத்திற்கு ஏன் வலியவந்து வாசித்தார் தெரியுமா? அதோடரகசியம் எனக்குத் தான் தெரியும்! என்றர்.

சுப்புணிக்கு சமையல் வேலையல் ஏற்பட்ட களைப்பெல்லாம் ஒடி விட்டது. பாகவதரிடம் அதைத்தான் நானும் கேட்கவேண்டும் என்றிருந்தேன், சொல்லுங்கள் பாகவதரே என்றன்.

(தொடரும்)

---



## இராமலிங்கர் பணி மன்ற இசைக்கலை விழா

வருடந்தோறும் பல விழாக்களை நடத்தும் இராமலிங்கர் பணி மன்றம் இவ்வருடம் தங்கள் ஏழாவது ஆண்டுஇசைககலை விழாவினை ஏப்ரல் 3 முதல் 10 வரை சென்னை ஜெமினி அருகில் உள்ள இராணி சீதை மன்றத்தில் நடத்தினர். இதனை இராஜாசர் அண்ணாமலை செட்டியார் நினைவு அறக்கட்டளையும் இணைந்து நடத்தியது. விழாவில் தினசரி கருத்தரங்கம், இசையரங்கம் நடைபெற்றன. தமிழ அரசு மேலவைத் தலைவர் டாக்டர் ம.பொ.சி, உயர்நீதி மன்ற நடுவர்கள். உயர் அலுவலர்கள், திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மட அதிபர், திருக்குறளார், நாகிரிதாரி பிரசாத் ஆசியோர் கலந்து சொற்பொழி வாற்றினர் இசையரங்கத்தில் டாக்டர் சீர்காழி கோ, சிவசிதம்பரம், தாராபுரம் சுந்தரராஜன், செல்வி பிரமிளா, மதுரை நீலா கிருஷ்ணமூர்த்தி, குன்னக்குடி பாலா, மா. வைத்திலிங்கம்—மா. கோடிலிங்கம் ஆகியோர் கலந்து பாடினர். மன்றத்தலைவர் பொள்ளாச்சி நா. மகாலிங்கம் அவர்கள் ஆதரவில் மன்றச் செயலாளர் பகீரதன் விழா ஏற்படுகளைச் செய்திருந்தார்.

---



தஞ்சாவூர் பொன்னையா பிள்ளை
நாட்டியக் கல்லூரி ஆசிரியர்
J. நடராஜன் மாணவி

**A. எட்வின**

(P.A. இருதயசாமி நாடார் மகள்)

TN/MS(S)/260
IYALLISAI' Musical Bai-Monthly Printed
by T. Thirunavukarasu at Jayalakshmi Art
Printers Kavarai Street, Vadapalani
Madras-26, Published / Edited by
M. Lakshmi, 9A, Andavar Street,
Anna Nedum Pathai, Madras-94.




---

உலகம் சுற்றிய
வயலின் கலைஞர்

# திருவள்ளூர் பார்த்தசாரதிக்கு பொன்னாடை



## திருப்போரூர் சந்நிதானம் போர்த்தினார்

கடந்த மே 21, 25 தேதிகளில் திருபோரூர் அருள்மிகு கந்தசாமி திருக்கோயிலில் கந்தன் அருட்சங்கம் சார்பில் 4வது ஆண்டு சித்திரைக் கிருத்திகைப் பெருவிழா நடைபெற்றது. சிதம்பரம் S. மீனாட்சி சுந்தரம் இன்னிசை நிகழ்ச்சிக்கு வாசிக்க வந்திருந்த வயலின் கலைஞர் திருவள்ளூர் பார்த்தசாரதிக்கு கந்தன் அருட் சங்கத்தார் ஒரு பாராட்டு விழா நடத்தினர்.

சமீபத்தில் இவர் மேன்டலின் சீனுவாசன் அவர்களுடன் சென்று உலகில் பல நாடுகளில்—ஏறத்தாழ 25 நாடுகளில் இசை நிகழ்ச்சிகளில் பங்குபெற்று வந்துள்ளார். இதனைப் பாராட்டி திருப்போரூர் சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சிவஞான சுவாமிகள் பார்த்தசாரதிக்கு பொன்னாடை போர்த்தினார். மயிலை கபாலீசுவரர் திருக்கோயில் தக்கார் சிவநெறிச்செம்மல் ம. து. குப்புசாமி முதலியார், நடராச கல்விக்கழக செயலர் R நடராசன், புலவர் சுப்புபெருமான், கந்தன் அருட்சங்கத் தலைவர் T S மோகனரங்கம் ஆகியோர் பாராட்டி பேசினர்.

இசையரசி பாடிய

# 'திரு அருட்பா' இசைச்சுட்டி!



வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் பாடிய திரு அருட்பா பாடல்களை இசையுடன் பாடி இதுவரை பல இசைத் தட்டுகள் இசைச் சுட்டிகள் Cassette வெளிவந்துள்ளன. திருவருட்பாவில் உள்ள தெய்வமணிமாலை பாடல்களை சீர்காழியார் பாடி இசைத் தட்டில் வெளி வந்தது. பின்னர் இசைச் சுட்டிகளில் சிதம்பரம் S. மீனாட்சி சுந்தரம், ஸ்ரீபதி, சரசுவதி சீனுவாசன், செல்வி பிரமிளா ஆகியோர் பாடி வெளி வந்துள்ளன.

தற்பொழுது சென்னைக் கலை பயில் பண்பாட்டுக் கழகம் ஆதாவில் கீதாஞ்சலி ரிகார்டிங் கம்பெனி மூலமாக இசையரசி சேலம் S. ஜெய லட்சுமி அவர்கள் திரு அருட்பா பாடல்களைப் பாடி ஒரு இசைச்சுட்டி வெளிவந்துள்ளது. இதனை சென்னைக் கந்த கோட்டத்தில் சட்ட மன்ற மேலவைத் தலைவர் டாக்டர் ம. பொ. சிவஞானம் அவர்கள் தலைமையில் அமைச்சர் மாண்புமிகு K.A. கிருஷ்ணசாமி வெளியிட உயர்நீதி மன்ற நடுவர் செங்கோட்டு வேலன் பெற்று வாழ்த்துரை வழங்கினார். திருக்குறளார் முனுசாமி, கந்த கோட்ட அறங்காவலர் பி. பால சுப்ரமணியம், சேலம் வழக்குரைஞர் அருட்பாமணி S. இராம லிங்கம் ஆகியோர் கருத்துரைகளை வழங்கினர்.

மறைந்த பெரியவர்

# திருக்கழுகுன்ற திருமுறைவாணர்



விரைவில் 15- வது நினைவு நாள் விழாவினை திருக்கழுகுன்றம் திரு முறை இசைவாணர் வே. நடேசமுதலியார் அவர்களுக்கு கொண்டாட உள்ளனர். செங்குந்தர் குலத்தில் தோன்றி தனது குலத்திற்கும். தமிழ் குலத்திற்கும் ஏராள தொண்டு செய்தவர் அவர். செங்கை மாவட்டத்தில் திருமுறை இசையினை கூட்டு வழிபாடாக பல இடங்களில் நடத்தி மக்களிடையே சைவத்தையும் தமிழிசையும் வளர்த்தவர், திருமுறை இசைபாடகராக விளங்கி விடுதலை இயக்க பாடல்களும் பாடியவர், 70 ஆண்டுகள் வாழ்ந்தவர். இவரது மூத்த மகனார் N. குருபாதம் ஒரு இசை ஆசிரியர், வடபழநி திருக்கோவில் கலைமாமணி ந. ஆறுமுகம் ஓதுவார் இவரது இரண்டாவது மகன் தந்தையார் புகழை வளர்த்து வருகின்றார். இவர் இசைச் சுட்டியில் சண்முக கவசம் பாடியுள்ளனார். இளைய மகன் புலவர் நடேச நாராயணன் தமிழாசிரியாரக தமிழ்ப்பணி செய்து வருகின்றார்.

---

Statement about Ownership and other Particulars about IYALLISAI

Form IV [See rule 8]

1. Place of Publication: 57, South Sivan Koil Street, Kodambakkam, Madras-24
2. Printers Name: T. Thirunavukkarasu
   NATIONALITY: Indian
   Address: Kavarai Street, Vadapalani, Madras-6
3. Publishers name: M. Lakshmi
   Nationality: Indian
   Address: 57 South Sivan Koil St., Kodambakkam, Madras-24.
4. Editors name / Nationality / Address: —do—
5. Names and addresses of Individuals who own the newspaper and Partners or their holders holding more than one Percent of the total Capital: —do—

I, M. Lakshmi hereby declare that the Particulars given above are true to the best of my Knowledge and belief.

Date : 1-3-85

Sd. M. Lakshmi
Publisher